# திருப்புகழமிர்தம்

கீலக ஐப்பசி



ஆசிரியர் :

## கிருபானந்தவாரி

திருப்புகழமிர்தம் காரியாலயம்
89, சிங்கண்ண செட்டித் தெரு, சென்னை-2.

முருகா

## இலக்ஷார்ச்சனை

காங்கேயநல்லூர் ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமி கோயிலில் கீலகஞூ ஐப்பசிமீ 5-ஆந் தேதி முதல் 10-ஆந் தேதி வரை (21-10-68 முதல் 26-10-68 வரை) இலக்ஷார்ச்சனை மிகச் சிறப்புற நடைபெறும். அர்ச்சனை செய்ய விருப்பமுள்ளவர்கள் அர்ச்சனை ஒன்றுக்குக் கட்டணம் ரூ. 7-50 வீதம் கீழ்க்கண்ட விலாசத்திற்கு அனுப்பி வைக்க வேண்டுகிறோம்.

K.M. குப்புசாமி முதலியார்,
நிர்வாக தர்மகர்த்தா.

ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமி கோயில், காங்கேயநல்லூர் P.O.
Via காட்பாடி எக்ஸ்டன்ஷன் N.A.

## சந்தா நேயர்களுக்கு

நமது திருப்புகழமிர்த இதழ்கள் மாதா மாதம் ஆங்கிலத் தேதி 16 அளவில் தபாலில் சேர்க்கப்படுகின்றன. நன்கு சரி பார்த்த பின்னரே தபாலில் சேர்க்கப்படுவதால் இவ்விடம் தவறு நேர இடமில்லை. ஆகவே தபால் இலாகாவில் ஏற்படும் குறை காரணமாக இதழ்கள் கிடைக்கப் பெறாத அன்பர்கள் அந்த ஆங்கில மாதம் 25 தேதி வரை பார்த்திருந்து அது வரை கிடைக்கவில்லையாகில் பின்னரே எமக்கு எழுத வேண்டும். அந்தந்த ஆங்கில மாத முடிவுக்குள் (30 அல்லது 31 தேதிக்குள்) தெரிவிக்காத அன்பர்கள் பின்னர் இதழ் ஒன்றுக்கு 35 காசுகள் வீதம் செலுத்தியே பெறலாம். குறிப்பிட்ட அளவு பிரதிகளே அச்சிடப்படுவதால் பிரதிகள் கைவசம் இருப்பதை அநுசரித்தே அனுப்பிவைக்கப்படும். ஆங்கில மாதம் 25 தேதிக்குள் பிரதிகள் கிடைக்கவில்லையென்று எழுதினுல் கவனிக்கப்படமாட்டாது. அடிக்கடி இதழ்கள் கிடைக்கப் பெறாத நிலையில் உள்ளவர்கள் அந்தந்த வட்டார தபால் அதிகாரிகளுக்கு எழுதி ஒழுங்கு செய்துகொள்ள வேண்டும்.

மானேஜர், திருப்புகழமிர்தம்.

## அன்பர்களுக்கு

திருநெல்வேலியில் நமது வெளியீடுகளைப் பெற விரும்புவோர் பின்வரும் இடத்தில் நேரில் குறித்த காலத்தில் பெற்றுக் கொள்ளலாம்.

ஆங்கில மாதம் மிழ் மாதம் 3, 4, 5 தேதிகள் ஆக ஆறு நாட்களில் காலை 9 முதல் 12 மணி வரை, மாலை 3 மணி முதல் 6 மணி வரை மட்டும்.

திரு. வீ. சங்கரன் பிள்ளை,
10, தெற்கு ரத வீதி, (பஸ் ஸ்டாப்பு அருகில்)
திருநெல்வேலி டவுன்.

உ

ஓம் குஹாய நம :





# திருப்புகழமிர்தம்



"குருப்புகழை மேவுகின்ற கொற்றவன் றூள்போற்றுந்
திருப்புகழைக் கேளீர் தினம்"

மலர் 33 | கீலக ஹு—ஐப்பசி மீ அக்டோபர் 1968 | இதழ் 7

## திருவருணை

திருவண்ணுமலை என்ற இத்தலம் பஞ்சபூதத் தலங்களில் தேயுஸ்தலம். இது நினைக்க முத்தியளிக்க வல்லது. சோணகிரி, சோணுசலம், அருணுசலம், அருணகிரி முதலிய பல பேர்களுடையது. அருணம் - சிவப்பு. சிவந்த வடிவுடன் விளங்குவதால் அருணுசலம் என்று பேர் பெற்றது.

மாலும் அயனும் பலகாலுந்தேடி அடிமுடி காணுதசோதிமலை. பலப்பல முனிவர்கள் தவம் புரிந்த புனித க்ஷேத்திரம். இந் நூலாசிரியராகிய அருணகிரிநாதர் அவதரித்த திருத்தலம்.

இத்தலத்துத் திருக்கோயிலில் மூன்றும் பிரகாரத்தில் அருணகிரியாரது சமாதிமண்டபம் அமைந்துள்ளது. அருணகிரியாருக்கு அருளிய - உபதேசித்த கோபுரத்தமர்ந்த குமரனும், கம்பத்திலிருந்து தோன்றிக் காட்சியளித்த கம்பத்திளையனுர் கோயிலும் தரிசிக்கத் தக்கவை. குகை நமசிவாயர், குரு நமசிவாயர் முதலிய பல மகான்கள் இங்கு தவஞ் செய்து முத்தி பெற்றுர்கள். அண்மையிலே வாழ்ந்த உண்மைத்துறவி சேஷாத்திரி சுவாமிகள் இங்கு உறைந்து முத்தி பெற்றுர்.

கார்த்திகை மாதம் கார்த்திகை நட்சத்திரத்தன்று சோதி வடிவாய் விளங்கும் இம்மலையை வலம்வர அன்புடன் ஒரு அடி எடுத்து வைத்தால் ஒரு அசுவமேதயாகப் பலன் உண்டாகும்.

## திருப்புகழ்

அருவ மிடையென வருபவர் துவரிதழ்
அமுது பருகியு முருகியு ம்ருகமத
அளக மலையவு மணிதுகி லகலவு மதிபார

அசல முலைபுள கிதமெழ அமளியில்
அமளி படஅந வரதமு மவசமொ
டணையு மழகிய கலவியு மலமல முலகோரைத்

தருவை நிகரிடு புலமையு மலமல
முருவு மிளமையு மலமலம் விபரித
சமய கலைகளு மலமல மலமரும் வினைவாழ்வுஞ்

சலில லிபியன சனனமு மலமல
மினியு னடியரொ டொருவழி படஇரு
தமர பரிபுர சரணமு மவுனமு மருள்வாயே

உருவு கரியதொர் கணைகொடு பணிபதி
யிருகு தையுமுடி தமனிய தநுவுட
னுருளை யிருசுடர் வலவனு மயனென மறைபூணும்

உறுதி படுசுர ரதமிசை யடியிட
நெறுநெ றெனமுறி தலுநிலை பெறுதவம்
உடைய வொருவரு மிருவரு மருள்பெற
வொருகோடி

தெருவு நகரியு நிசிசரர் முடியொடு
சடச டெனவெடி படுவன புகைவன
திகுதி கெனஎரி வனஅனல் நகைகொடு முனிவார்தஞ்

சிறுவ வனசரர் சிறுமியொ டுருகிய
பெருமஅருணையி லெழுநிலை திகழ்வன
சிகரி மிசையொரு கலபியி லுலவிய பெருமாளே.

### பதவுரை

உருவு கரியது ஓர் கணைகொடு=கரிய வடிவுடைய ஒப்பற்ற கணையைக் கொண்டும், பணி பதி=நாகராஜனாகிய வாசுகி, இரு குதையும் முடி=வில்லின் இரு முனைகளில் முடியப்படும் கயிறாகவும், தமநிய தநுவுடன்=பொன்மயமாகிய மேருமலை வில்லாகவும், இரு

சுடர் உருளை=சூரியனும் சந்திரனும் இரண்டு சக்கரங்களாவும், வலவனும் அயன் என=தேர்ப்பாகன் பிரம தேவனுகவும், மறை பூணும்=வேதங்கள் குதிரைகளாகப் பூட்டப்படும், உறுதிபடு சுரரத மிசை=உறுதியுடைய தேவர்களே தேரான அந்தத் தேர்மீது, அடி இட=(சிவபெருமான்) அடிவைத்தவுடன், நெறு நெறு என முறி தலும்=அத் தேர் நெறு நெறு என்று முறிபடவும், நிலைபெறு தவம் உடைய=நிலைத்த தவநெறியைக் கொண்டிருந்த, ஒருவரும் இரு வரும் அருள்பெற=திரிபுரத் தலைவர்களாகிய மூவரும் அருள்பெற்று உய்யுமாறும், ஒரு கோடி தெருவும்=ஒருகோடி தெருக்களும், நகரி யும்=அந்தவூர்களும், நிசிசரர் முடியொடு=அசுரர்களின் தலைகளும், சடசட என வெடி படுவன=சடசட என்று வெடிபட்டும், புகை வன=புகைபட்டும், திகுதிகுவென எரிவன=திகுதிகு என்று எரி வனவாய் அழியுமாறும், அனல் நகை கொடு முனிவார் தம்=நெருப் புடன் கூடிய சிரிப்பைக் கொண்டு கோபித்த சிவ பெருமானுடைய, சிறுவ=திருக்குமாரரே! வனசரர் சிறுமியொடு உருகிய பெரும= வேடர்மகளாகிய வள்ளியைக் கண்டு உள்ளம் உருகிய பெருமை வாய்ந்தவரே! அருணையில்=திருவண்ணமலையில், எழுநிலை திகழ் வன=ஏழுநிலைகளுடன் விளங்கும். சிகரிமிசை=கோபுரவாயிலில், ஒரு கலபியில் உலவிய=ஒப்பற்ற மயிலின் மீது உலாவிய, பெருமாளே= பெருமையிற் சிறந்தவரே! அருவம் இடை என வருபவர்=உருவமே யில்லாதது இந்த இடை யென்று கூறும்படி வந்த பொது மாதர் களின், துவர் இதழ் அமுது பருகியும்=பவளம் போன்ற வாயிதழின் ஊறலாம் அமுதத்தையுண்டும், உருகியும்=உள்ளம் உருகியும், ம்ருக மத அளகம் அலையவும்=கஸ்தூரி மணங் கமழ்கின்ற கூந்தல் அலைய வும்,அணிதுகில் அகலவும்=உடுத்துள்ள ஆடை விலகவும்,அதி பார= அதிகபாரமான, அசல முலை புளகிதம் எழ=மலைபோன்ற தனங்கள் பூரிக்கவும், அமளியில் அமளி பட=படுக்கையில் கோலாகலமாகவும், அநவரதமும்=எந்நாளும், அவசமொடு அணையும்=காம மயக்கத் தோடு சேர்கின்ற, கலவியும் அலம் அலம்=புணர்ச்சியும் போதும், போதும்; உலகோரை=உலகில் உள்ளவர்களை, தருவை நிகர் இடு புலமையும் அலம் அலம்=கற்பகத் தருவுக்கு நிகர் என்று பாடும் கவித்திறமும் போதும் போதும்; உருவும் இளமையும் அலம் அலம்= அழகும் இளமையும் போதும் போதும், விபரித சமய கலைகளும் அலம் அலம்=ஒன்றுக்கொன்று ஒவ்வாத சமய நூல்களும் போதும் போதும்; அலமரும் வினை வாழ்வும்=வேதனைப்படுத்தும் வினைக்கு ஈடான வாழ்வும், சலில லிபியன சனனமும் அலம் அலம்= நீர் மேல் எழுத்துக்கு நேரான பிறப்பும் போதும் போதும்; இனி உன் அடியரொடு ஒரு வழிபட=இனியேனும் தேவரீருடைய அடியா ரோடு அடியேனும் ஒரு வழிபட்டு ஈடேறுமாறு, தமர பரிபுர இரு சரணமும்=ஒலிக்கின்ற சிலம்பணிந்த இரு திருவடிகளையும், மவுன மும்=மௌனநிலையையும், அருள்வாய்=தந்தருளுவீராக.

## பொழிப்புரை

கரிய உருவம் உடைய திருமால் அம்பாகவும், நாகராஜனுகிய வாசுகி வில்லின் இரு முனைகள் பூட்டப்படுகின்ற நாணுகவும், பொன் மலையாகிய மேருகிரி வில்லாகவும், சூரியனும் சந்திரனும் சக்கரங்களாகவும், பிரமதேவன் சாரதியாகவும், வேதங்கள் குதிரைகளாகவும் உறுதியுடன் தேவர்களே இரதமாகவும் அமைந்த தேரில் சிவபெருமான் அடிவைத்தவுடனே, அத் தேர் நெறு நெறு என்று முறிபடவும், நிலைபெற்ற தவமுடைய முப்புரத்தலைவர்களாகிய மூவரும் அருள் பெற்று உய்யவும், ஒரு கோடி வீதிகளும் முப்புரங்களும் அதில் வாழ்ந்த அசுரர்களின் தலைகளும், சடசட என்று வெடி படவும், புகை படவும் திகுதிகு என்று எரியும்படி தீப்பொறி யுண்டாகும்படி சிரித்து வெகுண்ட சிவபெருமானுடைய திருக்குமாரரே! வேட்டுவரது புதல்வியாகிய வள்ளி பிராட்டியுடன் உருகிய பெருமானே! திருவண்ணுமலையில் ஏழுநிலைகளுடன் கூடிய கோபுர வாயிலில், ஒப்பற்ற மயில் வாகனத்தின் மீது உலாவிய பெருமையிற்சிறந்தவரே! உருவமே யில்லாத அத்துணை நுட்பமான இடையென்று கூறும்படி வந்த பொதுமாதர்களின் பவளம் போன்ற வாயிதழின் ஊறல் அமுதத்தை உண்டும், உள்ளம் உருகியும், கஸ்தூரியின் மணங் கமழ்கின்ற கூந்தல் அலையவும், உடுத்த உடை விலகவும், மலைபோன்ற மிகுந்த பாரமுள்ள தனங்கள் விம்மிதமடையவும், படுக்கையில் கோலாகலமாகவும், நாள்தோறும் காமமயக்கத்துடன் தழுவுகின்ற அழகிய புணர்ச்சியும் போதும் போதும்; உலகமாந்தர்களைக் கற்பகத்துக்குச் சமம் என்று பாடும் கவித்திறமும் போதும் போதும்; அழகும் இளமையும் போதும் போதும்; மாறுபடுகின்ற சமய நூலாராய்ச்சியும் போதும் போதும்! வேதனைப் படுத்துகின்ற வினையால் வரும் நீர்மேல் எழுத்துக்கு நேரான பிறப்பும் போதும் போதும்; இனிமேல் உமது அடியாருடன் ஒரு வழிபட்டு அடியேன் ஈடேறுமாறு, ஒலிக்கின்ற சிலம் பணிந்த இரு திருவடிகளையும் மோன நிலையையும் தந்தருளுவீராக.

## விரிவுரை

**அருவ மிடையென வருபவர் :—**

மாதர்களின் இடை கண்ணுக்குத் தெரியாத அளவு சுருங்கியிருப்பது அழகு.

"தெரியாதனவும் வரிவளையார் தங்கள்
மருங்கே" —நளவெண்பா.

"இல்லையே நுசுப்பு மென்பார்" —கம்பராமாயணம்.

**துவரிதழ் அமுது பருகியும் உருகியும் :—**

காமவிடாய் கொண்டோர் தாம் விரும்பும் மாதர்களின் பவளவாயிதழ் ஊறலைச் சுவைப்பார்கள்.

''குமுத அமுத இதழ் பருகி உருகி'' — *(கொலைமத)* திருப்புகழ்.

**கலவியும் அலம் அலம் :—**

மனிதன் கடைத்தேற வேண்டுமானல் அலம் புத்தி வர வேண்டும். அலம்—போதும்.

''போதுமென்ற மனமே பொன் செய்யும் மருந்து'' என்பது பழமொழி.

எத்துணைக்காலம் சேர்ந்து வாழ்ந்தாலும் மாதராசைஎளிதில் விலகாது. அறிவு என்ற கூரிய வாளால் திருவருள் துணை கொண்டு அதனை அகற்ற வேண்டும்.

**உலகோரைத் தருவை நிகரிடு புலமையுமலமலம் :—**

உலகிலுள்ள தனவந்தர்களை—ஒரு காசும் ஈயாத உலோபிகளை, ''நீ கற்பகமரத்துக்குச் சமானம்'' என்று புகழ்ந்து சமத்காரமாகப் பாடுகின்ற புலமையும் போதும் போதும்.

**உருவுமிளமையும் அலமலம் :—**

ஒன்றுக்கும் உதவாத இந்த உடம்பை அழகு செய்து கொள்வதும் இளமையோடு வாழவேண்டும் என்ற முயற்சியும் போதும் போதும்.

**விபரித சமய கலைகளு மலமலம் :—**

ஒன்றுடன் ஒன்று மாறுபட்டுக் கூறுகின்ற சமய நூல் கலைகளும், அவைகளின் ஆராய்ச்சியும் போதும் போதும்.

''கலகல கலெனக் கண்ட பேரொடு
சிலுகிடு சமயப் பங்கவாதிகள்...
கலைகளும் ஒழிய'' *(அலகிலவுணரை)* திருப்புகழ்.

**அலமரும் வினைவாழ்வும் சலிலலிபியன சனனமுமலமலம் :—**

சுவர்க்க நரக பூதலம் என்ற இடங்களில் சதா மாறி மாறிப் பிறப்பதற்கும்; துயரம் அடைவதற்கும் ஏதுவான வினைகளால் எய்தும் வாழ்வும், நீர்மீது எழுதிய எழுத்துக்கு நிகராக விரைவில் அழியும் இப்பிறவியும் போதும் போதும்.

''நீர்க் கோல வாழ்வை நச்சி'' —கம்பர்.

''நீர்மேல் குமிழிக்கு நிகரென்பர் யாக்கை'' —கந்தரலங்காரம்.

**இனியுனடியரொ டொருவழிபட :—**

"சென்றது செல்லட்டும்: இனியாவது அடியேன்; முருகா! உன் அடியாருடன் ஒன்றுபட்டு, பலவழிகளை மறந்து ஒரு வழி பட்டு உய்ய அருள் செய்".

**மவுனமும் அருள்வாயே :—**

வாய் பேசாதது மௌனம் ஆகாது. மனத்தின் தொடர் பின்றி நிற்குநிலை மௌனமாகும்.

"வாய்க்கும் கைக்கும் மௌனம் மௌனம் என்று ஏய்க்கும்"
"வாக்கும் மனமும் மவுனமுற எந்தை நின்னை
நோக்கும் மவுனம் இந்த நூலறிவில் உண்டாமோ"

—தாயுமானர்.

எல்லாவகையான சித்திகளிலும் தலையாயது மோனநிலை கைவரப் பெறுவதேயாகும்.

"மோனமென்பது ஞானவரம்பு" —ஔவையார்.

**உருவு கரியதொர் கணை கொடு :—**

இத்திருப்புகழின் பிற்பகுதியாகிய மூன்று அடிகளில் திரிபுரதகனம் மிக அழகாகக் கூறப்படுகின்றது.

கமலாட்சன், வித்யுன்மாலி, தாரகாட்சன் என்ற மூன்று அசுரவேந்தர்கள் சிறந்த சிவனடியார்கள். இவர்கள் இரும்பு, வெள்ளி, பொன் என்ற உலோகங்களாலாய மூன்று புரங்களில் வாழ்ந்தார்கள். இமையவருக்கு இடுக்கண் புரிந்தார்கள்.

திரிபுரவாசிகளின் சிவபக்தி குலையுமாறு திருமால் புத்தாவ தாரம் எடுத்து, நாரதரைச் சீடராகப் பாடச் செய்து திரிபுரநகர் களில் தெய்வம் இல்லை என்று பிரசாரம் புரிந்தார். திரிபுரத் தலைவர்கள் மூவர் மட்டும் உறுதிகுலையாது சிவபக்தியில் சிறந் திருந்தார்கள். திரிபுரவாசிகள் சிவபக்தி குலைந்தார்கள். தேவர் கள் சிவபெருமானிடம் திரிபுரத்தை அழிக்குமாறு முறை யிட்டார்கள்.

அப்போது, இந்தப் பூமியே தேராகவும், கீழேயுள்ள ஏழு வுலகங்கள் கீழ்த் தட்டுகளாகவும், மேலேயுள்ள ஏழுவுலகங்கள் மேல் தட்டுகளாகவும், எண்திசைப் பாலகர்கள் தூண்களாகவும், மேருகிரி வில்லாகவும், வாசுகி நாணாகவும், பிரமன் சாரதியாக வும், வேதங்கள் குதிரைகளாகவும், திருமால் பாணமாகவும், அதற்கு அக்கினி வாயாகவும், வாயு அம்பின் குதையாகவும் இவ்வாறு தேவர்கள் கூட்டமே தேராக அமைத்துத் தந்தார்கள். கரியவுருவுடைய திருமால் அம்பாக ஆனார்.

"மாலாய வாளியைத் தொடுத்தரக்கரில் ஒருமுவர்
மாளாது பாதகப் புரத்ரயத்தவர்
தூளாகவே முதல் சிரித்த வித்தகர்" —(ஆளுத) திருப்புகழ்.

கல்லானிழற் கீழாய்இடர் காவாயென வானோர்
எல்லாமொரு தேராய்அயன் மறைபூட்டிநின் றுய்ப்ப
வல்லாயெரி காற்றீக்கரி கோல்வாசுகி நாண்கல்
வில்லாலெயில் எய்தானிடம் வீழிம்மி ழலையே. —சம்பந்தர்.

அடியிட நெறுநெறென முறிதலும் :—

சிவமூர்த்தி அத்தேரில் அடிவைத்த மாத்திரத்தில் உறுதியான அத்தேர் நெறு நெறு என்று முறிந்து அழிந்தது.

தச்சு விடுத்தலும் தாமடி யிட்டலும்
அச்சு முறிந்ததென் றுந்தீபற
அழிந்தன முப்புரம் உந்தீபற. —திருவாசகம்.

நிலைபெறுதவம் உடைய ஒருவருமிருவருமருள் பெற :—

நிலைபெற்ற திரிபுரத்தலைவர் மூவரும், தீயால் வேவாது அருள் பெற்று உய்ந்தார்கள்.

ஒருவர் கயிலையில் குடமுழா வாசிப்பவராகவும், மற்ற இருவர் வாயில் காவலர்களாகவும் ஆனார்கள்.

இந்தக் குறிப்பை யுணர்த்தும் பொருட்டு ஒருவர் இருவர் எனப்பிரித்துக் கூறிய கவித்திறம் மிகவும் சிறந்தது.

ஒரு கோடி தெருவு நகரியும் :—

திரிபுர நகரங்கள் ஒருகோடி தெருக்களையுடையன என்றதனால் அதன் பரப்பும் விரிவும் புலனாகின்றன.

திகுதிகென எரிவன அனல் நகைகொடு முனிவார் :—

சிவபெருமான் எவர் மீதும் போர் புரிந்தார் என்று வரலாறுகள் கூறவில்லை.

சிரித்தார் - புரம் எரித்தார்.
காமனைக் கண்ணால் பொடிசெய்தார்.
சோமனைக் காலால் தேய்த்தார்.
இராவணனைத் திருவடி நகத்தால் அடர்த்தார்.
சலந்தரனைக் காலால் கீறிக் கொன்றார்
முயலகனைத் திருவடியில் மிதித்தார்.

குதியால் நமனை யுதைத்துள்ளங் காலினில் கூனிமிர
மதியாகந் தேய்த்தவ் விலங்கேசன் மாமுடிபத்துநக
நுதியால் மிதிக்கு முயலகன்மேனி நொறுங்க இன்னும்
மிதியா நின்ருல் அருளெங்கே சொக்கேசர்தம் மெல்லடிக்கே.
—பலபட்டரைச் சொக்கநாதப் புலவர்.

''அனகன் பெயர் நின்றுரு ளுந்திரி
புரமுந்திரி வென்றிட இன்புடன்
அழலுந்த நகுந்திறல் கொண்டவர் புதல்வோனே''
—(கனகந்) திருப்புகழ்.

## கருத்துரை

திருவருணையில் எழுந்தருளிய திருமுருகா! அடியவர் உறவும் மவுனமும் தந்தருள்.

## திருப்புகழ்

துகிலு ம்ருகமத பரிமள அளகமு
நெகிழ இருதன கிரியசை தரஇடை
துவள மனிதரு மமரரு முனிவரு முடனேடித்

தொடர வனமணி மகரமி லகுகுழை
யடரு வனவிட மிளிர்வன ரதிபதி
சுருதி மொழிவன கயல்விழி புரள்தர நடுவாக

வகிரு மதிபுரை தநுநுதல் பனிவர
வனச பதயுக பரிபுர மொலிபட
மறுகு தொறுமுல வியினிய கலவியை விலைகூறும்

வரைவி லரிவையர் தருசுக சலதியி
லலையு மெனதுயி ரநுதின நெறிதரு
மவுன சிவசுக சலதியில் முழுகுவ தொருநாளே

முகிலு மதியமும் ரவியெழு புரவியு
நெடிய குலைமிட றிடறமு துககன
முகடு கிழிபட வளர்வன கமுகின மிசைவாளை

முடுகு கயலுகள் வயல்களு முருகவிழ்
தடமு முளரிய அகழியு மதில்களு
முழுது முடையதொ ரருணையி லுறைதரு
மிளையோனே

அகிலு மருதமு முகுளித வகுளமு
மமுத கதலியும் அருணமும் வருடையு
மபரி மிதமத கரிகளு மரிகளு முடனேகொண்
டருவி யிழிதரு மருவரை தனிலொரு
சவர வனிதையை முனிதரு புனிதையை
அவச முடன்மல ரடிதொழு துருகிய பெருமாளே.

பதவுரை

முகிலும்=மேகமும், மதியமும்=சந்திரனும், ரவி எழு புரவியும்=சூரியனுடைய ஏழு குதிரைகளும், நெடிய குலே மிடறு இடற=தமது நீண்ட குலேகளின் கழுத்துப் பகுதியில் இடறவும், முது ககன முகடு கிழிபட=பழமையான ஆகாயத்தின் உச்சி கிழிபடவும், வளர்வன கமுகு இனம் இசை வாளே=வளர்ந்துள்ள பாக்குமரங்களின் கூட்டத்தின் மேல் பாயும் வாளே மீன்களும், முடுகு கயல் உகள்=அவ் வாளே மீன்களால் வெருட்டப்படும் கயல் மீன்களும் உலாவும், வயல்களும்=கழனிகளும், முருகு அவிழ் தடமும்=நறுமணங்கமழும் தடாகங்களும், முளரிய அகழிகளும்=தாமரைமலர்கள் விளங்கும் அகழிகளும், மதில்களும்=மதில்களும், முழுதும் உடையது=இவைகள் யாவும் பொருந்திய, ஓர் அருணேயில் உறைதரும்=ஒப்பற்ற திருவண்ணுமலேயில் எழுந்தருளியிருக்கும், இளேயோனே=இளம் பூரணரே! அகிலும்=அகில் மரமும், மருதமும்=மருத மரமும், முகுளித வகுளமும்=மலர்விடும் மகிழமரமும், அமுத கதலியும்=அமுதம்போல் இனிக்கும் வாழையும், அருணமும்=செம்மறியாடும், வருடையும்=மலேயாடும், அபரிமித மதகரிகளும்=அளவற்ற மதம் பொழியும் யானேகளும், அரிகளும்=சிங்கங்களும், உடனே கொண்டு அருவி இழிதரும்=உடனே இழுபட்டு வரப்பாயும், அருவிகள் இழிந்து வரும், அரு வரை தனில்=அருமையான மலேயில், ஒரு சவரவனிதையை= ஒப்பற்ற வேடப் பெண்ணே, முநிதரு புனிதையை=சிவமுனிவர் தவத்தால் வந்த பரிசுத்த மாதினே, அவசமுடன்=காதல் மயக்கத்துடன் வசம் இழந்து, மலர் அடி தொழுது உருகிய=அவருடைய மலர்ப்பாதத்தைத் தொழுது உருகிய, பெருமாளே=பெருமையிற் சிறந்தவரே! துகிலும்=ஆடையும், ம்ருகமத பரிமள அளகமும்=கஸ்தூரி மணங்கமழ்கின்ற கூந்தலும், நெகிழ=நெகிழ்ந்து குலேய, இருதன கிரி அசைய=இரண்டு கொங்கைகளாகிய மலேகள் அசைய, இடை துவள=இடை துவண்டுநிற்க, மனிதரும்=மனிதர்களும், அமரரும்=தேவர்களும், முநிவரும்=முனிவர்களும், உடன் ஓடி தொடர=கூடவே ஓடி வந்து தொடர, வன மணி மகரம் இலகு குழை அடருவன = அழகு மணிகள் மகர மீன்வடி

வில் அமைந்த தோடுகளைத் தாக்குவனவாய், விடம் மிளிர்வன = நஞ்சு உமிழ்வனவாய், ரதிபதி சுருதி மொழிவன = இரதியின் கணவனான மன்மதனுடைய நூலை எடுத்துக் கூறுவனவாய் விளங்குகின்ற, கயல் விழி புரள்தர = கயல் மீன் போன்ற கண்கள் புரள, நடுவாக வகிரு = நடுவே கீறுபட்ட, மதி புரை தநு நுதல் = சந்திரனைப் போல் வில்லைப்போல் வளைந்த நெற்றியில், பனி வர = வியர்வைத்துளிகள் துளிக்க, வனச பத பரிபுரம் ஒலிபட = தாமரை போன்ற பாதங்கள் இரண்டிலும் சிலம்புகள் ஒலிசெய்ய, மறுகு தொறும் உலவி = தெருக்கள் தோறும் உலாவி, இனிய கலவியை விலை கூறும் = இனிய புணர்ச்சியின்பத்தை விலை கூறுகின்ற, வரைவில் அரிவையர் தரு = வரைவு இல்லாத பொதுமாதர்கள் தருகின்ற, சுகசலதியில் அலையும் = இன்பக் கடலிலே அலைகின்ற, எனது உயிர் = அடியேனுடைய உயிரானது, அநுதினம் நெறிதரு = நாள் தோறும் நன்னெறியில் செலுத்தும், மவுன சிவசுக சலதியில் முழுகுவது = மவுன நிலையில் விளையும் மங்கலமான பேரின்பக் கடலில் மூழ்கும்படியான வாய்ப்புடைய, ஒரு நாளே = ஒருநாள் உண்டாகுமோ?

## பொழிப்புரை

மேகமும் சந்திரனும் சூரியனுடைய ஏழுகுதிரைகளும், தமது நீண்ட குலைகளின் கழுத்துப் பாகத்தில் இடறித் தடை படவும், பழைமையான ஆகாயத்தின் உச்சி கிழிபடவும், அவ்வளவு உயரமாய் வளர்ந்துள்ள பாக்கு மரங்களின் கூட்டத்தின் மீது பாயும் வாளை மீன்களும், அவ்வாளை மீன்களால் வெருட்டப்படும் கயல் மீன்களும் ஓடித்திரியும் வயல்களும், நறுமணம் வீசும் தடாகங்களும், தாமரை மலர்கள் விளங்கும் அகழிகளும், மதில்களும் ஆகிய இவைகள் யாவும் உடைய ஒப்பற்ற திருவண்ணாமலையில் வீற்றிருக்கும் இளம்பூரணரே! அகில், மருதம், மலர்களுடன் கூடிய மகிழமரம், அமுதம்போல் இனிக்கும் வாழை, செம்மறியாடு, மலையாடு, மதம் பொழியும் கணக்கற்ற யானைகள், சிங்கங்கள் முதலியன உருட்டப்பட்டு இழிந்து வரும் அருவிகளுடன் கூடிய அருமையான மலையில் ஒப்பற்ற வேடர்குலமாதும், சிவ முனிவரின் தவத்தில் உதித்த தூயமங்கையும் ஆகிய வள்ளி பிராட்டியை காதலின் மிகுதியால் வசம் இழந்து அவருடைய மலரடியை வணங்கியுருகிய பெருமிதமுடையவரே! உடுத்த உடையும், கஸ்தூரி மணங்கமழும் கூந்தலும் நெகிழ்ந்து குலையவும், இரு கொங்கை மலைகள் அசையவும், இடை துவளவும், மனிதரும் தேவரும் முனிவரும் கூடவே ஓடிவந்து தொடரவும், அழகிய இரத்தின மணிகள் பதித்த மகரமீன் போன்ற குழைகளைத் தாக்குவனவாய் நஞ்சினைக் கக்குவனவாய், மன்மதனுடைய காமநூலை எடுத்துக் கூறுவனவாய் விளங்குகின்ற கயல்மீன்

போன்ற கண்கள் புரளவும், இடையில் கீறுபட்ட நிலவை யொத்த வில்லைப் போன்ற நெற்றியில் வியர்வைத் துளிகள் துளிக்கவும், தாமரை மலர் போன்ற பாதங்கள் இரண்டிலும் சிலம்பு ஒலி செய்யவும், தெருக்கள் தோறும் உலாவி, இனிய புணர்ச்சியின்பத்தை விற்கின்ற, பொதுமாதர்கள் தருகின்ற சுகக் கடலிலே அலைகின்ற அடியேனுடைய உயிரானது, நாள் தோறும் நன்னெறியில் செலுத்தும் மௌன சிவசுகக் கடலில் மூழ்கும் நாள் ஒன்று அடியேனுக்குக் கிடைக்குமோ?

## விரிவுரை

இத்திருப்புகழ் விலைமகளிரது அவயவ நலங்களை மிகவும் எழில்பட இயம்புகின்றது.

**மனிதருமமரரு முனிவருமுடனோடி தொடர் :—**

அழகிய பொதுமாதர்களின் அழகில் மயங்கி மனிதர்களும் தேவர்களும், தவ முனிவர்களும் தம் வசமிழந்து அவர்கள் பின்னே தொடர்ந்து ஓடுவார்கள்.

காசிபர் மாயையைக் கண்டு மயங்கிய தன்மையை கந்த புராணத்தில் காண்க. மாதர் மயக்கின் வலிமையைக் கூறும் இந்த தனிச் செய்யுளையுங் காண்க.

நடந்தாள் ஒருகன்னி மாராசகேசரி நாட்டில் கொங்கைக்
குடந்தான் அசைய ஒயிலாய்; அதுகண்டு கொற்றவர்பின்
தொடர்ந்தார் சங்யாசியர் யோகம் விட்டார்; சுத்த சைவரெல்லாம்
மடந்தான் அடைத்து சிவபூஜையுங் கட்டி வைத்தனரே.

**வரைவி லரிவையர் :—**

தம்பால் வருபவர் ஆவார் ஆகாதவர்-மேலோர் கீழோர் என்ற ஒரு வரைவு இல்லாதவர் வரைவில் மகளிர்.

திருவள்ளுவர் வரைவில் மகளிர் என்றே ஒரு அதிகாரம் வகுத்துள்ளார்.

வரைவிலா மாணிழையார் மென்றோள் புரையிலாப்
பூரியர்கள் ஆழும் அளறு.

**தருசுக சலதியிலலையும் :—**

மேலே கூறிய பொருட்பெண்டிர் தரும் சிற்றின்பக் கடலில் காமுகர் முழுகி அலைவர்.

**மவுனசிவசுக சலதியில் முழுகுவது :—**

மனம் அற்ற சமாதிநிலை அலையோய்ந்த கடல் போல் விளங்கும். அதில் இன்பம் விளையும். அதில் உண்டாகும் இன்பம் இத்தன்மைத்தென்று உரையால் உரைக்க ஒண்ணாது.

போக்கும் வரவும் இரவும் பகலும் புறம்பும் உள்ளும்
வாக்கும் வடிவும் முடிவும் இல்லாதொன்று வந்துவந்து
தாக்கும் மனோலயம் தானே தரும்; எனைத்தன் வசத்தே
ஆக்கும் ஆறுமுகவா! சொல்லொணாதிந்த ஆனந்தமே:

—கந்தரலங்காரம்.

**முகிலுமதியமும்...மிசைவாளை :—**

இந்த அடி உயர்வுநவிற்சியணி. திருவண்ணாமலையின் அருகில் பாக்கு மரங்கள் வானளாவி வளர்ந்தோங்கியுள்ளன. அவற்றின் குலைகளில் மேகமும் சந்திரனும் சூரியனுடைய ஏழு குதிரைகளும் இடறித் தடைபடுகின்றன. அத்துணை உயர்ந்த பாக்குமரங்கள். அம்மரங்களின் மீது வாளை மீன்கள் தாவிக்குதிக்கின்றன.

**முடுகு கயலுகள்......இளையோனே :—**

இந்த ஆறுவது அடியில் திருவண்ணாமலையின் சிறப்பு கூறப்படுகின்றது.

திருவண்ணாமலையில் கயல் மீன்கள் நிறைந்த வயல்களும், மணம் வீசும் வாவிகளும், தாமரை பூத்த அகழிகளும், திருமதில்களும் நிறைந்திருக்கின்றன.

**அகிலு...உடனேகொண்டருவி யிழிதரு :—**

இந்த ஏழாவது அடி வள்ளிமலையின் அருவியின் திறத்தை இனிது கூறுகின்றது.

வள்ளிமலையில் பாயும் அருவி, அகில் மரம், மருத மரம், மகிழ மரம், வாழைமரம், செம்மறியாடு, மலையாடு, யானை, சிங்கம் முதலியவற்றை உருட்டிக்கொண்டு இழிகின்றது.

இந்த அடி அடியில் வரும் திருமுருகாற்றுப்படையை ஒத்திருக்கின்றது.

வேறுபல துகிலின் நுடங்கி அகில்சுமந்து
ஆரம் முழுமுதல் உருட்டி வேரல்
பூஉடை அலங்கு சினைபுலம்பவேர் கீண்டு
விண்பொரு நெடுவரைப் பரிதியில் தொடுத்த

தண்கமழ் அலர் இறல் சிதைய நன்பல
ஆசினி முதுசுளை கலாவ மீமிசை
நாக நறுமலர் உதிர ஊகமொடு
மாமுக முசுக்கலை பனிப்பப் பூநுதல்
இரும்பிடி குளிர்ப்ப வீசிப் பெருங்களிற்று
முத்துஉடை வான்கோடு தழீஇத் தத்துற்று
நன்பொன் மணிநிறம் கிளரப் பொன்கொழியா
வாழை முழுமுதல் துமியத் தாழை
இளநீர் விழுக்குலை உதிரத் தாக்கிக்
கறிக்கொடிக் கருந்துணர் சாயப் பொறிப்புற
மடநடை மஞ்ஞை பலவுடன் வெரீஇக்
கோழி வயப்பெடை இரியக் கேழலொடு
இரும்பனை வெளிற்றின் புன்சாய் அன்ன
குரூஉமயிர் யாக்கைக் குடாஅடி உளியம்
பெருங்கல் விடர்அளைச் செறியக் கருங்கோட்டு
ஆமா நல்ஏறு சிலைப்பச் சேண்நின்று
இழுமென இழிதரும் அருவிப்
பழமுதிர் சோலை மலைகிழ வோனே.

முனிதரு புனிதை :—

திருமால் சிவ முனிவராகத் தோன்றி வள்ளி மலையில் மாதவஞ் செய்து கொண்டிருந்தார். மகாலட்சுமி மானாகத் தோன்றினாள். அம் மானைச் சிவமுனிவர் விரும்பிப் பார்த்தார். அங்கு தவஞ்செய்து கொண்டிருந்த, திருமாலின் புதல்வி, மான் வயிற்றில் புகுந்து கருவாகிப் பிறந்தாள்.

இந்த வரலாற்றை அருணகிரிநாதர் இந்த இடத்தில் மிக அழகாகவும் சுருக்கமாகவும், உருக்கமாகவும், ‘முனிதரு புனிதை’’ என்று கூறியருளினார்.

## கருத்துரை

அருணையுறை அப்பனே! மவுன சிவசுகக் கடலில் மூழ்கி அடியேன் உய்ய அருள் செய்.

உ

முருகா

# கற்பு

---

## ஞானவதி

(பழையது)

ஞானவதி உத்தமகுணங்கட்கெல்லாம் உறைவிடமானவள். மாசற்ற மனம் படைத்தவள். கருணைபொழியும் கண்ணும், தானம் பொழியும் தடக்கையும் உடையவள். உயர்நிலைப்பள்ளியில் படித்து முதல் மாணவியாகத் தேர்ச்சிபெற்ற பின், வீட்டில் இருந்து கொண்டே சமய நூல்களையும் சாத்திரதோத்திர நூல்களையும் ஓதி, கல்வியின் பயனாகிய கடவுள் பற்றைக் கொண்டு, கணவனுடன் இல்லறமாகிய நல்லறத்தை நடத்தி வந்தாள்.

கூரிய அறிவும் சீரிய பண்பும் உடைய அவள் அந்தமாளிகையில் வாழ்ந்தது.மகாலட்சுமியேமானிடச்சட்டையுடன்உலாவுவது போல் இருந்தது. எப்போதும் ஏழை எளியவர்கட்கு அன்னமும் சொன்ன மும் அள்ளி அள்ளி வழங்குவாள். உற்றார் பெற்றாரேயன்றி மற்றாரும் வந்து வந்து அவளுடைய உதவியைப் பெறுவார்கள். ஈத்துவக்கும் இன்பத்தை அவள் சதா நுகர்ந்து வந்தாள்.

அவளுடைய அப்பாவுக்கு அவள் ஒரே புதல்வி. செல்வமாக வளர்க்கப் பெற்றாள். சீரும் சிறப்புமாக, ஊரும் உலகமும் மெச்ச மதிவாணனை மணந்து கொண்டாள்.

திருமணச் செலவு மட்டும் ஐம்பதினாயிரம் ஆயிற்று. ஐந்து நாள் கல்யாணம்; ஐந்து நாட்களிலும் பெரிய பெரிய இசைவாணர் களின் இன்னிசை யரங்குகள் நடைபெற்றன. வந்தவர்கட்குத் தட்டின்றி தட்டுடன் தாம்பூலம் பழம் தேங்காய் தரப்பட்டன. இதுவரை இப்படிப்பட்ட ஒரு திருமணவிழாவை யாண்டும் கண்ட தில்லை என்று பலரும் பாராட்டினார்கள்.

ஞானவதிக்குச் சீதனமாகமட்டும் ஒரு லட்ச ரூபாய் மதிப்புள்ள பாத்திரங்களும், பணமாக ஐந்து லட்சமும் மதிவாணன் பால் வந்து சேர்ந்தன.

மதிவாணன் நல்ல குணமும் நன்மதிப்பும் படைத்தவன். அவ னுடைய தந்தை தேடி வைத்த பணம் 20 லட்சத்துக்குக் குறை யாமல் இருந்தது. இந்தப் பணத்தை வைத்துக் கொண்டு சுகவாசி

யாக வாழ்ந்தான். நிலபுலங்கள், தென்னை வாழைத் தோட்டங்கள் இருந்தன. வீடு நிறைய தானியங்களும் மாங்காய் தேங்காய்களும் குவிந்திருந்தன.

மதிவாணனுடைய நண்பர்கள் பலர் எப்போதும் அவனை வளைய் வளைய வந்து கூடிக் கொண்டிருந்தார்கள்.

தெருப்பக்கம் பெரிய அறை. அதில் விசாலமான மேஜை. சுற்றி நாற்காலிகள். மதிவாணன் அதில் நண்பர்களுடன் அமர்ந்து சதுர் வேத பாராயணம் போல் ஓய்வு ஒழிச்சலின்றி சீட்டாடுவான். மணிக் கொரு முறை காபி, மணிக்கொரு ஓவல், மணிக்கொரு ஆர்லிக்ஸ் கொண்டுவரச் சொல்லி, அவைகளை உள்ளே செலுத்திவிட்டு தெம்பு டன் ஆடுவான். இடையிடையே ''நீயேன் ஜாக்கை இறக்கவில்லை? நீயேன் துருப்பைத் தட்டவில்லை?'' என்று வம்புச் சண்டைகள்வரும். மேஜையே உடைகின்ற மாதிரி சிங்க கர்ஜனை நிகழும். அந்த அறை யில் புகைமண்டிலம் சூழும். இருளில் ஒளி என்றபடி, புகைக்குநடுவே அவர்கள் கரங்களில் அணிந்துள்ள வைர மோதிரங்கள் ஒளி செய்யும்; சிரிப்பு ஒலி செய்யும். சிரிப்பு நீங்கி கோபக்கனல் பொங்கும். கையில் உள்ள சீட்டுக்கள் சிட்டுக் குருவிகள் போல் பறக்கும். அதற்கிடை யில் ஒரு இன்பம் பிறக்கும். இப்படி பொழுது போவதும், பொழுது விடிவதும் தெரியாமல் சீட்டுக் கச்சேரி நடைபெறும்.

**'' ஒரு காலமன்றிது சதாகால பூசையாம்**
**ஒப்புவித்தேன் கருணைகூர்''**

என்ற தாயுமானவருடைய திருவாக்குக்கு இலக்காகி அந்த வீடு அமர்க் களப்பட்டுக் கொண்டிருந்தது.

ஞானவதி இதை எத்தனை நாள்தான் பொறுத்துக் கொண்டி ருப்பாள். அவளால் இதைச் சகிக்க முடியவில்லை. ''தெய்வமே! இப்படியும் ஒரு திருவிளையாடலா? கடவுள் கொடுத்த அருமையான பொன் போன்ற காலத்தைச் சீட்டாட்டத்தில் கழிப்பதும் ஒரு கோலமா? சிலருக்கு நேரமே கிடைக்காது ஊருக்கும் உலகுக்கும் தொண்டு செய்கின்றார்கள். எனக்கு வாய்த்த என் அருமைக் கண வர் காமதேனுவின் பாலைக் கமரில் கவிழ்ப்பதுபோல் இறைவன் தந்த வாழ் நாளை வீழ் நாளாக—இல்லை பாழ் நாளாகப் போக்குகின்றாரே? அந்தோ! பரிதாபம், பரிதாபம். இந்த சீட்டாட்டத்துக்கு ஆதியந் தமேயில்லையே. அவிச்சின்ன தாரையாக நடந்து கொண்டேயிருக் கின்றதே. பரம்பொருளே! எனக்கு ஒரு குறையும் இல்லை. வீடு வாசல் நிலம் புலம் ஆடை அணிகலன்கள் தனம் தான்யம் எல்லாம் குறைவற நிறைந்திருக்கின்றன.

கணவனும் நல்லவர்தான். அவருக்கு அறிவு ஆற்றல் திறமை அழகு உடல் வலிமை எல்லாந்தான் இருக்கின்றன. ஆனால் இந்தச்

சீட்டுக்கு அடிமையாகி நோட்டுகளை எறிகின்றீரே. சதா வீட்டில் யார் யாரோ வந்து கூட்டம் போட்டுக் கும்மாளமும் கூத்தும் ஆடுகின்றீர்களே. இதற்கு முடிவே இல்லையா ? ஆண்டவனே! நீதான் இதற்கு வழி காட்ட வேண்டும்'' என்று வேண்டிக் கொள்வாள்.

ஒரு நாள் தனிமையில் இனிமையாகக் கூறுவாளானாள். ''உங்களை நான் மன்றாடிக் கேட்டுக் கொள்ளுகின்றேன். ஞாயிற்றுக் கிழமை மட்டும் சீட்டு ஆடுங்கள். கண்டவர்களை யெல்லாம் வீட்டில் சேர்க்காதீர்கள். சீட்டுக்கு ஒரு மணி நேரங்கூட ஓய்வில்லையே. தாங்கள் நல்ல குணமும் அறிவு நலமும் உடையவர்; உங்கட்கு நான் சொல்லியா தெரிய வேணும்.என் சொல்லுக்குச் சிறிது மனம் இரங்கி, இன்று முதலாவது இதைச் சிறிது குறைத்துக் கொள்ளுங்கள். ஏதாவது ஒரு தொழில் துறையில் ஈடுபடுங்கள். குந்திச் சாப்பிட்டால் குன்றுங் கரையுமே'' என்றாள்.

மதிவாணன் அவள் வார்த்தையைக் காதிலேயே வாங்கிக் கொள்ளவில்லை. சமயம் வரும்போதெல்லாம் இங்கிதமாக அவள் கணவனிடம் சீட்டாட்டப் பித்தை குறைக்குமாறு கூறுவாளானாள்.

மதிவாணன் ''இங்கே பார். நீ ஒன்றும் எனக்குப் புத்திசொல்ல வேண்டாம். நான் ஆயிரம் பேருக்குப்புத்தி சொல்லுவேன். சீட்டாட்டத்தில் உள்ள இன்பம் சொர்க்கத்தில் கூடக் கிடையாது. சீட்டாட்டத்தில் உட்கார்ந்தால் உலகமே மறந்து விடுகின்றது. இல்லை. என்னையே மறந்து விடுகின்றேன். ஆகா! அதில் விளைகின்ற இன்பம் வேறு எதிலும் விளையாது. நீ நல்ல உத்தமி. கணவன் கருத்துக்கு மாறாக நடக்காதவள். கற்புக்கரசி. ஆதலால் இதில் என் கருத்துக்கு மாறாக ஒன்றும் சொல்லாதே'' என்றான்.

ஞானவதி தன் கணவனுடைய போக்கையும் பிடிவாதத்தையும் எண்ணி எண்ணி உள்ளம் புண்ணானாள். இதற்கு ஏதாவது ஒரு வழி செய்ய வேண்டும் என்று திட்டமிட்டாள்.

ஒரு நாள் கலக்டர் முதலிய பெரிய பெரிய அதிகாரிகள் எல்லாம் வந்து கூடி சீட்டு விழா நடாத்திக் கொண்டிருந்தார்கள்.

ஞானவதி நேரே பூஜை அறைக்குள் புகுந்து பழநியப்பனைப் பயபக்தியுடன் பணிந்தாள். அபிஷேக நீரை முகத்தில் தெளித்துக் கொண்டாள். ''முருகா! உன்னருள் முன்னின்றருள வேண்டும்'' என்று வேண்டிக் கொண்டாள்.

அப்போது பகல் 1 மணி. கணவன் சீட்டு விளையாடும் அறைக்கு அருகில் சென்று சற்று உரத்தகுரலில் ''பழையது தயாராக இருக்கின்றது. சாப்பிட வாருங்கள்'' என்றாள்.

அந்த சொல் அங்கு கூடியிருந்த அத்தனை பேருக்கும் ஒரு அதிர்ச்சியை யுண்டாக்கியது. பெரிய பணக்காரன். நிலபுலங்கட்குத் தலைவன். இவன் வீட்டில் புதிதாகச் சமைப்பதில்லையா ? பழைய சோறு தான் ஆகாரமா ? என்ற எண்ண அலைகள் மோதின. மெல்ல எல்லாரும் நழுவினார்கள்.

மதிவாணன் எழுந்து உணவுக் கூடத்துக்கு வந்தான். பெரிய வாழையிலை யிட்டு சீரகச் சம்பா பச்சரியன்னம் வெள்ளிமலைபோல் படைத்தாள். தங்கக் கலசம் வைத்ததுபோல் பருப்பு. கும்பாபிஷேகம் பண்ணுவது போல் புத்துருக்கு நெய். சுற்றிலும் நெய்யில் பொறித்த கறிகள்; ஆனையடியப்பளம்; தக்காளி ரசம். கட்டித்தயிர். இத்தனையும் உண்ட மதிவாணன் தனக்குள் நினைத்தான். இவள் பழையது என்றாளே. சுடச்சுட சோறு படைக்கின்றாளே. ஏன் இப்படி நாலு பேர்கள் மத்தியில் பழையது சாப்பிட வாருங்கள். என்று கூறி நம்ம மானத்தைக் காற்றில் பறக்க விட்டாள்'' என்று கருதினான். அவளுடைய குணக்கடலில் முழுகினவன் ஆதலால் அவளைக் கண்டிக்க மனம் இடங் கொடுக்கவில்லை. சும்மா இருந்து விட்டான்.

பழையபடியே குறித்த நேரத்தில் சீட்டுவிழாவுக்கு கொடியேற்றம் செய்யப்பட்டது. தொடர்ந்து அந்த விழா நடைபெற்றது.

மறுநாளும், பல பெரிய மனிதர்கட்கு முன் ''பழையது தயாராக இருக்கின்றது. சாப்பிட வாருங்கள்'' என்று கணீர் என்று அழைத்தாள். இப்படி நாலைந்து நாள் அழைத்தாள். எல்லோருக்கும் பெரிய ஆச்சர்யம். இது என்ன ? ''இவர்கள் வீட்டில் தினம் பழையதுதானா? இது எங்கும் இல்லாத திருக்கூத்தாக இருக்கின்றதே.'' என்று கருதினார்கள், புன்னகை பூத்தார்கள். முக்கியமான பெரிய மனிதர்கள் வீட்டில் மதிவாணன் பங்களாவில் தினம் பழையதுதான் சாப்பிடுகின்றார்கள். என்று பேச்சு நடமாடியது. சிலர் அவனைப் பார்த்து, ''பழையது போகின்றது'' என்று பரிகசிக்கவுந் தொடங்கினார்கள்.

மதிவாணனுக்கு மிக்க அவமானமாக இருந்தது. மனதில் பெரிய வேதனையேற்பட்டது.

அடுத்த நாள் M. L. A. க்கள், M. P. க்கள் முதலிய தக்க பெரிய மனிதர்களுடன் சீட்டாடிக் கொண்டிருந்தான்.

மெல்ல ஞானவதி வந்து, ''பழையது தயாராக இருக்கின்றது. சாப்பிட வாருங்கள் என்றாள்.

மதிவாணனனுக்கு சீற்றக்கனல் பொங்கியெழுந்தது. ''ஞானம் ஏன் என் மானத்தை இப்படி தினம் கப்பல் ஏற்றுகின்றாய்? நீ உத்தமகுணம் படைத்தவள். எனக்கு வந்த அவமானம் உனக்கில்லையா? தினம் சுடச் சுட அன்னம் படைக்கின்றனையே. பழையது சாப்பிட வாருங்கள் என்று கூப்பிடுகின்றாயே? உனக்குப் புத்தியிருக்கின்றதா?'' என்று வெகுண்டு கேட்டான்.

ஞானவதி கணவன் முன் நின்று, ''பிராணபதி! சற்று நன்கு ஆழ்ந்து சிந்தித்துப் பாருங்கள். என் வார்த்தையில் உள்ள கருத்து தங்கட்குப் புலனாகும். தாங்கள் சாப்பிடுவது அத்தனையும் பெரியவர்கள் தேடி வைத்த பழையதுதானே. தாங்கள் ஒன்றும் புதியதாகத் தேடியதை உண்ணவில்லையே. ஆகவே முன்னோர்கள் தேடியது பழையதுதானே? அதைத்தான் நான் பழையது சாப்பிட வாருங்கள். என்றேன். இதில் என்ன பிழையுளது? பிழையிருந்தால் என்னைக் கண்டியுங்கள்; தண்டியுங்கள்'' என்று அவள் கூறும்போது அவளுடைய கண்களில் இருந்து முத்துமுத்தாக நீர் சிந்தியது. அவள் குரல் தழு தழுத்தது.

இந்த அரிய பொன்னுரையைக் கேட்டான். அவனுடைய மதியில் இருந்து மாசு அகன்றது ஒளி பிறந்தது. ஆகா! இவள் கூறியது உண்மைதானே. முன்னோர்கள் தேடி வைத்ததை உண்பது பழையதுதானே! என்று உணர்ந்தான். சீட்டுக் கட்டுக்களைத் தூக்கிக் குப்பைத் தொட்டியில் எறிந்தான்.

அன்றுமுதல் அவனுடைய சீட்டாடும் அறை தொழில் துறையின் அலுவலகமாக மாறியது. ஒரு சிறந்த தொழிலைத் தொடங்கினான். சுருசுருப்பாக வேலைபார்த்தான். பொருள் புதியதாகத் தேடினான். ஞானவதியால் ஞானம் பெற்றாள். அவள் வாழ்வில் இன்பம் மலர்ந்தது. முன் இனித்த சீட்டு இன்று அவனுக்குக் கசந்தது. அதில் காட்டிய ஊக்கத்தைத் தொழிலில் காட்டினான். அதனால் பலர் அவனிடம் வேலை பார்த்தார்கள். பலருக்கு வேலை கிடைத்தது. பல குடும்பங்கள் தழைத்தன. அவனுடைய தொழிலுக்கு ''ஞானம் கம்பெனி'' என்று பேர் சூட்டினான்.

ஞானம் கவலை நீங்கிக் கணவனுடன் ஒன்றி உவந்து வாழ்ந்தாள்.

# சாந்தி பருவம்

## ஆபத் தருமம்

(144-ஆம் பக்கத் தொடர்ச்சி)

பகைவனுன எலியின் இதமொழியைக் கேட்டுத் திண்மையுள்ள பூனை பொருளும் யுக்தியும் அமைந்த வசனத்தைச் சொல்லலாயிற்று. ''பலிதனே! மகிழ்ச்சி யடைகின்றேன். என்னை வாழச் செய்கின்ற உனக்கு நன்மையுண்டாகட்டும். நீ கூறியது நம்மிருவருக்கும் நன்மையேயாகும். நானே பெருந்துன்பத்தில் இருக்கின்றேன். நீ என்னைவிடப் பெருந்துன்பத்தில் அகப்பட்டுக் கொண்டிருக்கின்ருய். துன்பமுள்ள இருவர்களும் சந்தி செய்துகொள்ளவேண்டும். தாமதிக்காமல் இச்சமயத்திற்கு ஏற்றதைச் செய். உனக்கும் எனக்கும் நன்மையுண்டாகட்டும். நான் உன்னைத் துன்புறுத்த மாட்டேன். நான் உன் அன்பனும் சீடனும் ஆகின்றேன். உன் கட்டளையைச் செய்வேன். உன் நன்மையில் கவனம் வைப்பேன். உன்னை அடைக்கலம் புகுந்தேன். என்னை நீ காப்பாற்று. நானும் உன்னைக் காப்பாற்றுவேன்'' என்று கூறியது.

பலிதம் என்ற எலி கூறுகின்றது. ''லோமசனே! உன் சொல் உத்தமமானது. உன் அறிவை நான் மெச்சுகின்றேன். இப்போது நான் உன்னிடம் வந்து சேருகின்றேன். கீரிப்பிள்ளையால் எனக்கு அச்சம் வந்திருக்கின்றது. உள்ளே உன்னிடம் வந்த என்னை நீ கொல்லக்கூடாது. கோட்டானிடமிருந்தும் என்னை நீ காக்க வேண்டும். உன் வலைக்கயிறுகளை அறுத்துக் காப்பாற்றுவேன். இது சத்தியம். எனவே உன்பால் வரும் என்னைக் காக்க வேண்டும்'' என்றது.

லோமசம் என்ற பூனை பலிதம் என்ற எலியைப் பார்த்து மகிழ்ச்சியுடன் கூறுகின்றது. ''நண்பனே! வேகமாக என்னிடம் வா. நீ என் உயிருக்கு நண்பன். அறிவிற் சிறந்தவனே! உன் அருளால் நான் வாழப் போகின்றேன். இப்போது உன்னுல் உயிர்பெறப் போகின்ற எனக்கு நீ கட்டளையிடு. என்ன என்ன கட்டளையிட்டாலும் நான் அவற்றைச் செய்வேன். நம்மிருவருக்கும் நன்மையுண்டாகட்டும். சங்கடத்திலிருந்தும் நலங்களையே செய்வேன். முதலில் உதவி செய்பவன் நீ. பிரதி உபகாரம் செய்பவன் நான். நீ செய்யும் உதவிதான் சிறந்தது. செய்த வுதவிக்கு மறு வுதவி அதற்கு அடுத்ததுதானே'' என்று கூறியது.

பூனையால் தேறுதல் சொல்லப்பட்ட அறிவுள்ள எலி தாயிடத்தில் செல்லும் சேய்போல் பூனையின் வயிற்றில் சுகமே உறங்கியது. பூனையின் துணையைப் பெற்ற எலியைக் கண்டு, இது நமக்குக் கிட்டாது என்றெண்ணிய கோட்டானும் கீரியும் ஆச்சரியப்பட்டுக் கொண்டு தத்தம் இடங்களுக்குத் திரும்பிச் சென்றுவிட்டன.

தேச காலங்களை யறிந்த எலி மெல்ல மெல்லக் கயிறுகளை அறுக்கத் தொடங்கியது. கயிறுகளின் கட்டினால் துன்பம் அடைந்துள்ள பூனை, வேகமில்லாமல் கயிறுகளை யறுக்கும் எலியைப் பார்த்து, "அன்பனே! ஏன் உனக்கு இந்தத் தாமதம்? என்னால் காப்பாற்றப் பட்ட நீ என்னை அவமதிக்கின்றாய். அந்தப் பாதகனான வேடன் வருவதற்கு முன் கயிறுகளை அறுத்துவிடு" என்றது.

எலி, "அழகுள்ளவனே! நீ பேசாமலிரு. அவசரப்படாதே, உனக்குப் பரபரப்பு வேண்டாம். எனக்குக் காலந் தெரியும். அகாலத்தில் செய்யப்படும் கருமம் செய்கின்றவனுக்குப் பயனைத்தராது. காலமறிந்து செய்கின்ற கருமம் சிறந்த பயனைத் தரும். இப்போது உன்னை விடுவித்தால் உன்னாலேயே எனக்கு அச்சம் நேரும். காலத்தைப் பார்த்துக் கொண்டிரு. எதற்காக அவசரப்படுகின்றாய்? ஆயுதபாணியாக வேடன் வருவதைக் காண்கின்ற அக்கணமே கயிறுகளை அறுத்து விடுவேன். அச்சமயத்தில் உனக்கு வேறு புத்தி விளையாது. வேடனுக்கு அஞ்சி மரத்தில் ஏறிக் கொள்வாய். நானும் வலைக்குள் நுழைந்து கொள்வேன்" என்றது.

பூனை தன் காரியத்தில் வேகமுள்ளதாகி எலியை வேண்டிக் கொள்கின்றது. "நல்லவர்கள் நண்பனின் காரியத்தில் இப்படித் தாமதிக்க மாட்டார்கள். நான் எவ்வித வேகமாக உன்னைத் துன்பத்திலிருந்து விடுவித்தேனோ அவ்விதமன்றோ நீயும் வேகமாக இதைச் செய்ய வேண்டும்? அறிவிற் பெரியவனே! நீ முன்னுள்ள பகையைக் கருதித் தாமதிப்பாயானால் என் உயிர் பிரியும். அறியாமையால் நான் உனக்கு ஏதாவது தீங்கு செய்திருந்தாலும் மன்னித்துக்கொள், எனக்கு அருள் செய்" என்றது.

நீதிநெறிகளில் திறமையும் பெரிய அறிவும் படைத்த எலி' "பூனையே! நட்பும் பகையும் காலத்தாலும் இடத்தாலும் உண்டாகின்றன. நண்பன் பகைவனாவான்; பகைவன் நண்பனாவான். காரியம் முடிந்தபின் உதவி செய்தவனை நினைக்கின்றவர் உலகில் மிக அரிது. ஆதலால் காரியத்தை முழுவதும் முடிக்காமல் மிச்சமுள்ளதாகவே செய்து வைக்கவேண்டும். இப்போது எல்லாக் கயிறுகளும் அறுபட்டுவிட்டால் உன்னாலும் எனக்குத் துன்பம் நேரக்கூடும். இதோ பார். பல கயிறுகள் அறுபட்டுவிட்டன. ஒரு கயிறுதான் மிச்சமிருக்கின்றது. வேடன் வரும் சமயத்தில் இந்த ஒன்றை அறுத்து

விடுவேன். வேடனுக்கு முன் நீ என்னைப் பிடிக்கும் முயற்சி செய்யாமல் வேடனுக்கு அஞ்சி மரத்தில் ஏறி ஒளிவதை மட்டுமே செய்வாய். ஆதலால் அவசரப்படாமல் சுகமே இரு'' என்றது.

இவ்வாறு எலியும் பூனையும் உரையாடிக் கொண்டிருக்கின்ற போது இரவு முடிவடைந்தது. கதிரவன் உதிக்கலானான். லோமசம் என்ற பூனைக்கு மிகுந்த அச்சம் உண்டாயிற்று. கருஞ்சிவப்பு நிறமும் கொடுமையும் விகாரமும் உடைய வேடன் நாய்க் கூட்டங்கள் தொடர வந்தான். பரிகன் என்ற வேடன் ஆயுத பாணியாகக் காணப்பட்டான். காலதூதனைப் போன்ற அவனைக் கண்ட பூனை நடுநடுங்கி 'பலிதனே! இப்போது என்ன செய்வாய்?'' என்று கேட்டது. தொலைவில் வேடனைப் பார்த்த கீரியும் கோட்டானும் நட்பு கொண்ட பூனையையும் எலியையும் பார்த்து அவைகளின் அறிவின் திறமைக்கு மெச்சி ஓடி விட்டன. எலி உடனே கயிற்றை அறுத்து விட்டது. விடுபட்ட பூனை விரைந்து மரத்தில் ஏறிக்கொண்டது. எலி வளையையடைந்தது. வேடன் பயன் கிட்டாது யந்திரத்தை எடுத்துக் கொண்டு ஏமாற்றத்துடன் வீடு சென்றான்.

மரத்தின் நுனியிலிருந்து கொண்டு பூனை எலியைப் பார்த்துக் கூறத் தொடங்கியது. ''பலிதனே! ஒருவித நட்பின் குறிப்பும் செய்து கொள்ளாமல் நீ வேகமாக ஓடி விட்டாய். நீ என்னைப் பற்றி சந்தேகிக்கின்றனையா? என்னை நீ முன் நம்பினாய். நானும் உன்னைக்காப்பாற்றினேன். பிறகு நீ என் உயிரைக் கொடுத்துக் காத்தருளினாய். இப்போது ஏன் என்னிடம் வராமலிருக்கின்றாய்? நன்றி மறந்தவன் நன்றியடைய மாட்டான். தோழனே! உன்னால் காப்பாற்றப்பட்டு நான் என் உறவினருடன் கூடியிருக்கின்றேன். நானும் என் உறவினரும் உன்னை வழிபடக் கடமைப்பட்டவர்கள். உயிரைக் கொடுத்தவனை எவன் பூசிக்காமல் இருப்பான்? நீ என்னுடம்பு வீடு பொருள் எல்லாவற்றுக்குந் தலைவனாயிருக்க வேண்டும். நீ எனக்குக் கட்டளை யிடுகின்றவனாயிரு. நீ எனக்கு அமாத்தியனாயிரு. மைந்தனைத் தந்தை கட்டளை யிடுவது போல் நீ எனக்குக் கட்டளை யிடு. உனக்கு என்னிடம் அச்சம் வேண்டாம். என் உயிரின்மீது ஆணை யிடுகின்றேன். நீ அறிவினால் சுக்கிராச்சாரியரேயாகும். நாங்கள் வலிமையுள்ளவர்கள். ஆலோசனையின் வலிமையுள்ள நீ எனக்கு வெற்றியைத் தருவாயாக'' என்று கூறியது.

எலி ''லோமச! நீ சொல்லியவை அனைத்துங்கேட்டேன். என் அறிவில் தோன்றியதைக் கூறுகின்றேன். கேள். நண்பர்களையும் அறிந்து கொள்ள வேண்டும்; பகைவர்களையும் அறிந்து கொள்ளவேண்டும். இது மிக நுட்பமான அறமாகும். நண்பர்கள் பகைவர்களைப் போலவும், பகைவர்கள் நண்பர்களைப் போலவும் இருப்பார்கள். அவர்கள் ஆசைக்கும் லோபத்துக்கும்

வசப்பட்டு நன்மொழி கூறப்பட்டாலும் உண்மையை யறிகின்றார் களில்லை. பிறப்பில் பகைவன் என்ற ஒருவன் இல்லை. நண்பனும் அப்படியே யில்லை. தத்தம் காரியங்களுக்காக நண்பர்களாகவும் பகைவர்களாகவும் ஆகின்றார்கள். துன்பத்தைத் துடைப்பதற்காக ஒருவனையொருவன் அடுக்கின்றான். நட்பு செய்கின்றான். நட்பு நிலைத்திருப்பதில்லை. பகையும் நிலைத்திருப்பதில்லை. காரியத்தினால் நட்பும் பகையும் ஏற்படுகின்றன. ஒரு சமயத்தில் நண்பனும் பகைப்பான்; பகைவனும் நட்பு கொள்வான். இதற்குக் காரியந் தான் வலிமையான காரணம். எவன் நண்பர்களிடம் அதிக நம்பிக் கையும், பகைவனிடம் நம்பிக்கையே யில்லாமலும் இருப்பானோ அவன் வாழமாட்டான். நம்பிக்கையில்லாதவனிடம் நம்பிக்கை கூடாது; நம்பிக்கையுள்ளவனிடம் அதிக நம்பிக்கையும் கூடாது. நம்பிக்கையினாலுண்டாகும் அச்சம் வாழ்க்கையின் வேர்களையறுக் கும். தந்தையுந் தாயும் மைந்தனும் மாமனும் மருகனும் சம்பந்தி களும் காரியத்தின் சேர்க்கையால் உண்டாகின்றார்கள். தாயுந் தந்தையுங் கூட மைந்தன் பதிதனாயிருந்தால் அவனைத் தள்ளிவிடு வார்கள். உறவு ஒரு காரணத்தால் உண்டாகின்றது. நீ என் னிடம் அன்பாகப் பேசுவது எப்படி? கணவன் மனைவிக்குங் கூட உடன் பிறந்தார்களுக்குங் கூட காரணத்தால்தான் அன்பு ஏற் படுகின்றது. காரணமின்றி ஏற்படுவதை நான் பார்க்கவில்லை. கொடுப்பதனால் ஒருவன் அன்பு கொள்கின்றான். இன்சொல்லால் ஒருவன் அன்பு கொள்கின்றான். நம்மிருவருக்கும் ஒரு காரண நிமித்தம் நட்பு ஏற்பட்டது. அக்காரணம் முடிவடைந்ததும் நட்பும் முடிவடைந்துவிட்டது. இப்போது உனக்கு என்னைத் தின்று பசியாரவேண்டும் என்ற எண்ணந் தவிர வேறு காரணம் இருப்பதாக நான் அறியவில்லை. காலமானது காரணத்தை மாற்றி யமைக்கும். அறிவிற் சிறந்தவனை உலகம் அனுசரித்திருக்கும். இந்த நேரம் உன்னிடம் நட்பு செய்யத் தக்கதன்று. மேகங்கள் நிறம் அடிக்கடி மாறுவதுபோல் காரியங்கள் ஒவ்வொரு சமயத்திலும் வேறுபடுகின்றன. பகைவனாயிருந்த நீ நண்பனானாய். இப்போது பழையபடி பகைவனாகி விட்டாய். உதவி முடிந்ததும் நட்பும் முடி வடைந்து விட்டது. இயற்கையில் நீ எனக்குப் பகைவன். காரியத் துக்காக நண்பனானாய். அந்தக் காரியம் முடிந்த பின் பகைவனாக மாறிவிட்டாய். நல்ல அறங்களை அறிந்த நான் உன்னிடம் சிக்கிக் கொள்வேனா? உனக்கு நான் உணவு. நீ என்னை உண்பவன். நீ வலியுள்ளவன்; நான் மெலிந்தவன். நம்மிருவருக்கும் நட்பு நீடித் திருக்கக் காரணமில்லை.

நீ விடுதலை பெற்ற பின் என்னை உணவாக நாடுகின்றாய். நான் உன்னை நன்கு அறிவேன். என்னை காலை யுணவாகக் கருதுகின்றாய். நீ பசித்திருக்கின்றாய். நீயும் உன் உறவினரும் எனக்குப் பணி

விடை செய்ய அதற்கு நான் தகுதியுள்ளவனல்லன். நீ அன்பாயிருந்தாலும் பசித்திருக்கின்ற உன் உறவினர் என்னைப் பிடித்துத் தின்பார்கள். காரணத்தால் உண்டாகிய சேர்க்கையானது முடிவு பெற்றபடியால் நான் உன்னுடன் சேரமாட்டேன், நான் செய்த உதவியை நினைப்பாயாகில் அங்கிருந்து கொண்டே என் நன்மையைச் சிந்தித்துக் கொண்டிரு. தொலைவிலிருந்தும் நான் உன்னிடம் அஞ்சுகின்றேன். உனக்கு நன்மை யுண்டாகட்டும். லோமச! நீ வளர்ச்சியடைவாயாக. வலிமையுள்ளவனிடம் மெலிந்தவன் கூடுவது ஒருபோதும் கூடாது. உனக்கு மேற்கொண்டு என்னால் ஆவதொன்றிருக்குமானால் சொல். நான் செய்கிறேன். என் உயிரை மட்டுங் கொடுக்க மாட்டேன். உயிரை வேண்டி அரசும் பொன்மணிகளும் இழக்கத் தக்கவை. அறிவுள்ளவன் எல்லாப் பொருள்களையும் விட்டாவது உயிரைப் பாதுகாக்க வேண்டும். உயிரோடிருந்தால் எல்லாம் பெறலாம். தாரத்தாலும் தனத்தாலும் உயிரைக் காக்க வேண்டும். காரியங்களின் நுட்பதிட்பங்களையறிந்து நடக்கின்றவனுக்கு துன்பங்கள் உண்டாகமாட்டா. வலிமையில்லாத ஒருவன் வலிமையுள்ள பகைவன் பிரியத்தைச் செய்தாலும் ஐயுறத்தக்கவனேயாவான். நான் இதை விட்டுப் போகின்றேன்'' என்றது.

பலிதத்தால் வெளிப்படையாகவே ஏளனஞ் செய்யப்பட்ட பூனை நாணமுற்று எலியைப் பார்த்துக் கூறத் தொடங்கியது. ''சத்தியமாக நான் சபதம் செய்கிறேன். மித்திரத் துரோகி என்று என்னை நீ நிந்திக்கின்றாய். நீ என் நன்மைக்கு முயற்சி செய்தவன். உன் அறிவைச் சிறந்ததென்று நான் அறிகின்றேன். என்னுடைய குலத்தின் தன்மையைக் கொண்டு நீ வேறு எண்ணத்துடன் பேசுகின்றாய். நீ என்னைத் தவறாக எண்ணுவது நியாயமன்று. சாதுவே! உயிரைக் கொடுத்ததனால் உன்னிடம் நான் அன்பு செய்கின்றேன். நான் நன்றியறிவுள்ளவன். நீ நெறியறிந்தவன்; நண்பர்களிடம் அன்புடையவனாயிருக்கின்றேன். உன்னிடம் சிறந்த பக்தி பூண்டிருக்கின்றேன். இவ்விதமிருக்க என்னை நீ நிந்திப்பது முறைமையன்று. நீ என்னை நிந்திப்பதனால் நான் உறவினருடன் உயிரையும் விட்டு விடுவேன். நல்ல மனமுள்ள என்போன்றவர்களிடம் அறிஞர்கள் நட்பையே பார்க்கின்றார்கள். அறத்தின் உண்மையை யறிந்தவனே! என்னிடம் நீ சந்தேகங் கொள்வது நியாயமாகாது'' என்று கூறியது. இதைக் கேட்ட எலி ஆழ்ந்த கருத்தமைந்த இந்த வசனத்தைச் சொல்லத் தொடங்கியது.

''நீ சாது. நண்பனாயிருப்பவனையும் நான் நம்பவில்லை. துதி செய்வதனாலேயோ பொருள்களாலேயோ நீ திரும்பவும் என்னை அடைய முடியாது. அறிவிற் சிறந்தவர்கள் காரணமின்றிப் பகை

வர்களின் வசத்தை அடைய மாட்டார்கள். சுக்கிராச்சாரியர் இதைப்பற்றி அடியில் வருமாறு கூறியுள்ளார். பகைவர் பகைவருடன் சேர்ந்து செய்யத் தக்க காரியத்தில் மிக்க வலிமையுள்ளவனுடன் சந்தியைச் செய்துகொண்டு அறிவினுல் மிக்க எச்சரிக்கையுடன் உலாவ வேண்டும். காரியத்தைச் செய்து கொண்டபின் நம்பக் கூடாது. நம்பிக்கையுள்ளவனிடத்தில் அதிக நம்பிக்கை வைக்கக் கூடாது. பிறர் தன்னை நம்பும்படிச் செய்யவேண்டும்; பிறரைத் தான் நம்பக் கூடாது என்று சுக்கிர நீதி கூறுகின்றது. நீதி நூல்களின் சாரமாவது நம்பிக்கையில்லாமை யென்று சொல்லப்படுகின்றது. மனிதர்களிடம் நம்பிக்கை யில்லாமலிருப்பது நமக்கு முழு நன்மையாகும். வலிமை குறைந்தவர்களாக இருப்பினும் நம்பிக்கை யில்லாமலிருப்பவர்கள் பகைவரால் துன்புறமாட்டார்கள். வலிமையுடையவர்களாயினும் பகைவனிடம் நம்பிக்கை வைப்பவர்கள் பகைவர்களால் கட்டப்படுகின்ருர்கள். பூனையே! உன்போன்றவர்களிடம் நான் உயிரைக் காப்பாற்றிக் கொள்ளவேண்டும். நீயும் வேடனிடத்தில் உன்னைக் காப்பாற்றிக்கொள் என்று கூறியது. இதைக் கேட்டுக் கொண்டிருக்கும் போதே பூனை நடுங்கி வேகமாகச் சென்றது. அறிவிற் சிறந்ததும் சாத்திரங்களின் உண்மைப் பொருளை அறிந்ததுமான எலி வேறு வளையை யடைந்தது.

இவ்விதம் நல்லறிவுள்ளதும், வலிமையில்லாததுமான பலிதம் என்ற எலி தன் அறிவினுல் அதிக வலிமையுள்ள பல பகைவர்களை வஞ்சித்து உய்வு பெற்றது. ஆதலால் பண்டிதனுயிருப்பவன் பகைவனுயிருந்தாலும் வலிமையாளனிடம் சந்தி செய்து கொள்ள வேண்டும். எலியும் பூனையும் ஒன்ருெடொன்று சேர்ந்து விடுபட்டன. இவ்விதம் அரசனுடைய ஆபத்கால தருமத்தை உனக்கு விரிவாக எடுத்துக் கூறினேன். இதன் சுருக்கத்தையும் கேள்.

பகையுள்ள இரண்டும் நட்பு செய்து தப்பித்துக் கொண்டன. அறிவிற் சிறந்தவன் அறிவின் வலிமையைக் கொண்டு பகைவனிடம் உய்வு பெறுவான். கவனக் குறைவாக இருந்தால் அறிவுள்ளவர்களால் வஞ்சிக்கப்படுவான்.

அச்சமிருப்பினும் அச்சமில்லாதவன் போலவும், நம்பிக்கை யில்லாதவனும் நம்பிக்கையுள்ளவன் போலவும் நடிக்க வேண்டும். எச்சரிக்கையாக இருக்கின்றவன் சலிக்கமாட்டான். சலித்தாலும் அழியமாட்டான். பகைவனுடன் சமயத்தில் சந்தியையும் நண்பனுடன் சமயத்தில் போரையும் புரிய வேண்டும் என்று உண்மையறிந்தவர்கள் உரைக்கின்ருர்கள்.

இந்தக் கதையைக் கேட்ட நீ நண்பர்களின் நடுவில் விதிப்படி நடந்து கொள். சிறந்த அறிவையும், பகைவன் நண்பனுக்குள்ள வேற்றுமையையும், சமாதானத்துக்கும் போருக்கும் உரிய காலங்களையும், ஆபத்துக் காலத்தில் உய்யும் வழியையும் தெரிந்து கொண்டு, பகைவனுடன் சமாதானஞ் செய்துகொண்டு அறிவுடன் நடக்கவேண்டும். அறம், பொருள், இன்பம் என்ற மூவகைப் பயனுக்கும் விரோதமில்லாத இந்த நீதியைக் கேட்டு மக்களைக் காத்து நீ உயர்ந்திருக்க வேண்டும். சத்துருமித்துரு என்ற இருவருக்குமுள்ள சந்தி விக்கிரகங்களைப் பற்றி நன்கு உனக்கு உபதேசித்தேன். அரசன் எப்பொழுதும் இந்த நல்ல நடையை அநுசரித்து ஒழுக வேண்டும்'' என்ருர்.

[தொடரும்)

## சந்தா நேயர்களுக்கு முக்கிய அறிவிப்பு

அச்சுக்கூலி ஏற்றத்தாலும், அச்சுத்தாள் விலையேற்றத்தாலும் ஏற்படும் அதிகச் செலவை ஓரளவு இதுகாறும் சமாளித்து வருகின்றோம். இதற்கிடையே மத்திய அரசினர் சிறிய பத்திரிகைகளுக்கான தபாற்கட்டணத்தை ஒன்றுக்கு இரண்டரைப் பங்காக உயர்த்தி விட்டனர். மற்ற தபாற் கட்டணங்களையும் கூட்டிவிட்டனர். ஆக இவ்வாறு இதுபொழுது ஏற்பட்டுள்ள அதிகச்செலவுகளைச் சமாளிக்க ஆண்டுச் சந்தாத் தொகையை மேலும் கூட்டவேண்டிய நெருக்கடி ஏற்பட்டுள்ளது. எனவே அன்பர்கள் அடியிற் குறிப்பிட்டுள்ள ஆண்டுச் சந்தாத் தொகைக்கும் தாங்கள் அனுப்பியுள்ள தொகைக்குமுள்ள குறைத்தொகையை விரைவில் அனுப்பிவைக்க வேண்டுகின்றோம்.

**கீலக ஆண்டு முதல் ஆண்டுச் சந்தா**

| | | | |
|---|---|---|---|
| இந்தியா, இலங்கை | ... | ரூ: | 3-50 |
| மற்ற நாடுகள் | ... | ரூ. | 5-50 |

மானேஜர், திருப்புகழமிர்தம்
சிந்தாதிரிப்பேட்டை, சென்னை-2.

---



---

## அன்பர்கள் கவனத்துக்கு

நமது காரியாலயத்துக்கோ, ஆசிரியருக்கோ எழுதப்படும் கடிதங்களுக்குப் பதிலை விரும்புவோர் பதிலுக்காக கார்டோ, தபால் தலைகளோ அனுப்பினாலொழிய பதிலனுப்ப வசதிப்படாது.

மானேஜர், திருப்புகழமிர்தம்

Registered with the Registrar of Newspapers for India under R. N. 1109/57.



Edited by Sri KIRUPANANDAVARI & Published by M. Madusoodana Sivam, 89, Singanna Chetty Street, Madras-2. Printed by K. M. John at Jeevan Press. 8, Titaraooo Mudali Street Triplicane, Madras-5.